வேதமே தர்ம மூலம்

# ஸீதையின் ஸ்வயம்வரமும் அநஸூயாவின் அறிவுரைகளும்




தமிழாக்கம்

**பி.கே. பாஸ்கரன்,** M A (Skt), M Phil. B.Ed



*Published by*

**பி.வி. சுந்தரேசன்**

**பல்லிப்பாக்கம் ப்ரஹ்மஸ்ரீ வேங்கடேச தீக்ஷிதர் ஸ்ம்ருதி ட்ரஸ்ட்**

பல்லிப்பாக்கம், திண்டிவனம் தாலுக்கா - 604 307

வேதமே தர்ம மூலம்

# ஸீதையின் ஸ்வயம்வரமும் அநஸூயாவின் அறிவுரைகளும்




தமிழாக்கம்

**பி.கே. பாஸ்கரன்,** M A (Skt), M Phil. B.Ed.

Compiled by

**பி.ஆர். நடராஜன்**



Published by

**பி.வி. சுந்தரேசன்**

பல்லிப்பாக்கம் ப்ரஹ்மஸ்ரீ வேங்கடேச தீக்ஷிதர் ஸ்ம்ருதி ட்ரஸ்ட்

பல்லிப்பாக்கம், திண்டிவனம் தாலுக்கா - 604 307

உ

ஸ்ரீ குருப்யோ நம:



*ஸ்ரீ ராமஜயம்!! ஸ்ரீ ராமோ ஜயதி!!*
*கூஜந்தம் ராம ராமேதி மதுரம் மதுராக்ஷரம்!*
*ஆருஹ்ய கவிதா சாகாம் வந்தே வால்மீகி கோகிலம்!!*

ஸ்ரீ ராமருடைய ஜன்ம பூமி அயோத்தி என்பது மறுக்க முடியாத உண்மையாயிற்று. அதனால் அவர் அந்த எல்லைக்கும் மட்டும் தான் சொந்தம் என்பதில்லை. உலகெங்கும் வாழும் ஒவ்வொரு ஹிந்துவின் மனக்குஹைகளிலும் அவர் நிரந்தரமாக குடிக் கொண்டிருப்பவர் என்பதையும் மறுக்க முடியாது. மனிதப் பண்புகளை ஒருங்கே திரட்டிய மஹா புருஷன் ஸ்ரீ ராமன். எண்ணம், சொல், செயல் மூன்றிலும் ஒரு நேர்மையை கடைப்பிடித்து, வாழ்ந்து காட்டி, ஒரு தெய்வமாக உயர்ந்து நின்றவர். தன்னை ஒரு அவதாரமாகக் காட்டிக் கொள்ளாமல், (ஆத்மானம் மானுஷம் மன்யே) ஒரு மனித வாழ்க்கையின் நெறி முறைகளை, சோதனைகளும் கஷ்டங்களும் வந்த போதும், கைவிடாமல் கடைப்பிடித்து ஒரு உதாஹரணப் புருஷனாக திகழ்ந்தவர். அவரின் இந்த உயர்ந்த பண்புகளால் ஹிந்துக்கள் அவர் மீது மாறாத பக்தியைக் கொண்டிருக்கிறார்கள் என்பதில் வியப்பேதும் இல்லை. அவரைப் பற்றி யார் ப்ரவசனம் செய்தாலும் போய் கேட்பார்கள். ராமனின் கதையை எத்தனை முறை கேட்டாலும் கேட்பவர்களுக்கும் சலிப்பே வருவதில்லை. அலுப்பும் ஏற்படுவதில்லை. மேலும் இந்த ராம காதை தான் எத்தனைப் பட்டி மன்றங்களுக்கு வற்றாத ஜீவ நதி போல் வாதிடப் பொருளைத் தொடர்ந்து தந்து கொண்டிருக்கிறது!!

''அவ்வளவு பெருமைகளையும் அனைத்து கல்யாண குணங்களையும் கொண்ட ஒருவர் உண்டா? அப்படிப்பட்டவர் ஒருவர் இருந்தால் அவரைப் பற்றி தெரிந்துக் கொள்ள ஆவலாக

உள்ளேன்'' என்று முதன் முதலில் ஸ்ரீ ராமனைப் பற்றி பணிவுடன் கேட்க ஆரம்பித்தவர் அக்காவியத்தை இயற்றிய வால்மீகி மஹரிஷியாகும். (ஏததிச்சாம்யஹம் ஶ்ரோதும்). அக்கதையை ''நான் சொல்கிறேன், காது குளிரக் கேள் என்னும் வகையில், மிக்க ஸந்தோஷத்துடன் முதலில் சொல்லத் தொடங்கியவர் முனி ஸ்ரேஷ்டர் நாரதராகும். (ஶ்ரூயதாமிதி ப்ரஹ்ருஷ்டோ வாக்யமப்ரவீத்). அடுத்ததாக ஸ்ரீ ராமனின் புதல்வரர்களான லவனுக்கும், குசனுக்கும் வால்மீகி முனிவர் இந்த திவ்ய சரித்ரத்தைச் சொல்கிறார். இந்தக் காவியத்தில் பல சந்தர்ப் பங்களில் ஹனுமன், சீதை போன்றவர்களும் அந்த அந்தக் கட்டத்திற்கு ஏற்ற வகையில் ஸ்ரீ ராமனின் கதையை நினைவு கூர்ந்து ஆனந்தம் அடைகிறார்கள்.

இனி நாம் காணப்போகும் ஒரு நிகழ்வு என்னவென்றால் ஸ்ரீ ராமர் தனது வனவாசப் பயணத்தில் சித்ரகூடத்திலிருந்து புறப்பட்டு மஹரிஷி அத்ரியும் அவரது மனைவி அநஸூயாவும் வசிக்கும் ஆஸ்ரமத்தை அடைந்து அவர்களை சந்திப்பதாகும். அங்கு தேவி சீதை தனது விவாஹம் நடந்த விதத்தை அநஸூயைக்கு விவரிக்கிறாள். இந்த சந்திப்பை வால்மீகி முனிவர் அயோத்யா காண்டத்தில் மூன்று சர்க்கங்களில் விவரிக்கிறார். இதைத் தெள்ளத் தெளிவாக தமிழாக்கம் செய்து ஸ்ரீ பி. கே. பாஸ்கரன் நமக்கு அளிக்கிறார்.

பாரத தேசத்தின் பல மாநிலங்களில் ஸ்ரீ ராமன் மேல் கொண்ட அபரிமித அன்பினால் அவரது சரித்திரத்தை அவர்களது வழியில் சொல்லி ஆனந்தம் அடைந்தார்கள். தமிழில் கம்ப ராமாயணம் மிகவும் உயர்ந்ததோர் இலக்கியமாகச் சான்றோர்களால் கருதப் படுகிறது. அது போலவே ஸ்ரீ துளசி தாஸ் கோஸ்வாமி என்பவரால் இயற்றப்பட்ட ஸ்ரீ ராமசரிதமானஸ, வட இந்தியர்களால் போற்றப் படும் காவியமாகும். மூல இதிஹாசமான வால்மீகி ராமாயணத்தை தழுவிய அந்த இலக்கியத்திலும் இந்த சந்தர்ப்பமானது விவரிக்கப்படுகிறது.

ஜனன மரண சுழற்சியிலிருந்து விடுபட வேண்டும் என்பதே ஒவ்வொரு ஆஸ்திக ஹிந்துவின் வாழ்வின் குறிக்கோளாக இருக்கும் என்பதில் இரு கருத்துகளுக்கு இடமிருக்காது. முதலில் இந்த உலகத்தில் காணும் பொருள் எல்லாம் அநித்தியம் என்பதை உணர வேண்டும். பிறகு அவற்றின் மேல் இருக்கும் பற்றை விட

வேண்டும். இந்த உடல் மேல் உள்ள ஆசை, பொருளாசை, விஷய சுகங்கள் இவைகளை அறவே விட்டொழிக்க வேண்டும். லோக பந்தத்தை வேறருக்க வேண்டும். ஸ்தூல சரீரத்தின் உள்ளிருக்கும் அந்தராத்மாவை உணர வேண்டும். இவை யனைத்தும் அவ்வளவு சுலபமான செயல்கள் அல்ல அல்லவா? ஆனால் அதற்கு மார்க்கம் ஒன்று உண்டு என ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகள் சொல்கிறார். ''மனஸே! உண்மையைச் சொல். ராமனின் சந்நிதியும் சேவையும் தானே நிரந்தர சுகம்? இந்த செல்வங்கள் நிரந்தரமான சுகத்தை தருமா? ராமனை த்யானம், செய்து பஜனையில் ஈடுபட்டு ஏற்படும் ருசிக்கு பால், தயிர், வெண்ணெய் ஈடாகுமா? கங்கை ஸ்நானம் உயர்ந்ததா இல்லை கிணற்றுக் குளியல் உயர்ந்ததா? இந்த்ரிய சுகம் தேடும் இந்த வாழ்வு தூய்மை அற்றது தானே! நல்ல புத்தி கொண்ட தியாகராஜனால் புகழப்பட்ட ராம கீர்த்தனம் தானே நிரந்தர சுகத்தைத் தரும்!! எனவே மனமே அயராமல் ஸ்ரீ ராமனின் சந்நிதியைத் தியானம் செய்.''

*ஜன்மமும் மரணமும் இன்றித் தீருமே!*
*இம்மையே இராம எனும் இரண்டெழுத்தினால்!!*

ஓவ்வொரு வாசகரும் ஸ்ரீ ராமனின் உயர்வை மனதில் த்யானித்து, த்ருட பக்தி கொண்டு, அவரை ஆராதித்து வாழ்வின் உயர்வை அடைய வேண்டும் எனப் ப்ரார்த்திக்கிறோம். ஸ்ரீ ராமரைப் பற்றி நினைத்து, பக்தி செய்ய இந்த நூல் உதவினால் அதுவே இந்த வெளியீட்டின் பயனை அடைந்ததாகும்.

பி.வி. சுந்தரேசன்
மானேஜிங் ட்ரஸ்டீ,
பல்லிப்பாக்கம்
ப்ரஹ்மஸ்ரீ வேங்கடேச தீக்ஷிதர் ஸ்ம்ருதி டிரஸ்ட்
06-01-2020



உ

ஸ்ரீகுருப்யோ நம:!

*ஸ்ரீ சிவராமக்ருஷ்ணாப்யாம் நம:!!*
*ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம். அயோத்யா காண்டம்.*
*(தமிழாக்கம் : ஸ்ரீ பி. கே. பாஸ்கரன்)*

## சீதையின் வாக்கால் சீதா கல்யாணம்

ஸ்ரீராமனும் சீதையும் சித்ரகூடத்திலிருந்து புறப்படுதல், அத்ரி மற்றும் அனசூயை சந்திப்பு

முனிவர்கள் அங்கிருந்து விடைபெற்றபின் பல்வேறு காரணங்களை உத்தேசித்து பலவாறாக சிந்த்தித்து அங்கு தங்குவதை (ராமன்) விரும்பவில்லை. (1)

இங்குதான் பரதன், தாயார் மற்றும் அயோத்தியின் குடிமக்கள் என்னை சந்திப்பதற்கு வந்திருந்தார்கள். அந்த நினைவு மேன்மேலும் சோகத்தில் மூழ்கடித்து என்னை துன்புறுத்துகிறது. (2)

பெருங்குணமுள்ள பரதனின் படையின் தங்குதலால், இந்த இடம் முழுவதும் குதிரைகள் மற்றும் யானைகளின் சாணத்தினால் மிகவும் அசுத்தப்பட்டிருக்கின்றது. (3)

ஆகையால் இவ்விடத்தை விட்டு அகன்று வேறு இடத்திற்கு செல்வது என்று தீர்மானித்து ராமன், சீதை மற்றும் லக்ஷ்மணனுடன் அவ்விடத்தை விட்டு அகன்றார், (4)

போற்றுதலுக்குரிய அத்ரி மகரிஷியின் ஆஸ்ரமத்தை அடைந்தபின், பெருமதிப்பு வாய்ந்த ராமன் அவர் காலில் விழுந்து வணங்கினார். அத்ரி மகரிஷியும் ராமனை தன் மகன் போல் வரவேற்றார். (5)

அந்த அத்ரி மகரிஷி தாமாகவே முன்வந்து ராமனை எல்லா வகையிலும் உரியமுறையில் உபசரித்தார். லக்ஷ்மணண் மற்றும் பதிவ்ரதையான சீதையையும் கருணையான வார்த்தைகளால் உபசரித்தார். (6)

நேர்மையான முறையில் பழக்கப்பட்ட எல்லா உயிரினங்களின் உயர்விற்காக தன்னை ஈடுபடுத்திக்கொண்ட, அத்ரி மகரிஷி எல்லோராலும் பெரிதும் மதிக்கப்படும், வயது முதிர்ந்த தன் மனைவியிடம் கனிவான வார்த்தைகளைப் பேசினார். (7)

ரிஷிகளில் மேன்மையான அத்ரி மகரிஷி, கடுந்தவம் புரியும், உயர்ந்த குணமுடையவரும், தர்மத்தை தீவிரமாக அனுசரிப்பவருமான தன் மனைவியிடம் சீதையை வரவேற்குமாறு பணித்தார். பிறகு தன் மனைவியைப் பற்றிய கதையை கூறலானார். (8)

குற்றமற்ற ராமா, ஒரு முறை இந்த உலகமானது பத்து வருடங்கள் தொடர்ந்து வறட்சியாகவே இருந்தது. இந்த பதிவ்ரதையான அனசூயா கிழங்கு மற்றும் பழங்களை உற்படுத்தி கங்கையை பாயச்செய்தாள். அவள் தன்னைத்தானே கடுமையான விரதங்களில் ஈடுபடுத்திக்கொண்டு பத்தாயிரம் வருடங்களுக்கு மேலாக கடுந்தவத்தை மேற்கொண்டு தன் விரதத்திலேயே மூழ்கினாள். தேவர்களை உத்தேசித்து தான் தீவிரமுறையில், எல்லா கஷ்டங்களையும் நீக்கி பத்து இரவுகளை ஒரே இரவாக்கினாள். அவள் உன் தாய் போன்றவள். (9-12)

இவ்வுலகம் முழுவதும் தன்னுடைய கார்யங்களினால் புகழ் பெற்று அனசூயா என்று அறியப்பட்டவளை, வயது முதிர்ந்த, சிறப்பு வாய்ந்த, அசூயையிலிருந்து விடுபட்டவளை, எல்லோராலும் விரும்பப்பட்டவளை, சீதை அணுகட்டும். (13)

முனிவரின் வார்த்தைகளைக் கேட்ட பின்னர், ராமன் அவ்வாறே ஆகட்டும் என்று கூறி விட்டு, சீதையிடம் கூறினார். (14)

இளவரசி! நீ முனிவரின் வார்த்தைகளைக் கேட்டாய், மேலும் தாமதிக்காமல், இந்த தபஸ்வினியை உன் மேன்மைக்காக் அணுகுவாயாக. (15)

ராமனின் வார்த்தைகளைக் கேட்டவுடன், மிதிலை அரசனின் மகள், சீதை, தன் நன்மையின் பொருட்டு, தர்மத்தை அறிந்தவளான, அத்ரி மகரிஷியின் மனைவியான அனசூயையை மிகவும் மரியாதையுடன் ப்ரதக்ஷிணம் செய்தாள். (16)

அதிபதிவ்ரதையும், பாக்யம் செய்த அனசூயை வயது முதிர்ந்தும் மெலிந்தும் காணப்பட்டாள். வயது முதிர்ச்சியினால் தோல் மெலிந்தும், நரைமுடியுடனும் இருந்தாள். வேகமாய் காற்று அடித்தால் வாழைமரமானது எப்படி ஆட்டங்காணுமோ அவ்வாறே உடல் நடுக்கமும் காணப்பட்டது. அப்படிப்பட்ட அனசூயையின் பெயரை உச்சரித்தவாறு மிகுந்த மரியாதையுடன் அவள் காலில் வீழ்ந்து வணங்கினாள். (17-18)

தபஸ்வியான அனசூயைக்கு தன் நமஸ்காரத்தை செலுத்திய பின், கைகளை கூப்பியவாறு, சந்தோஷத்துடன் நலம் விசாரித்தாள். (19)

அனசூயையும் சீதையை பார்த்ததால் அதிக சந்தோஷத்துடன், எப்பொழுதும் தன்னை தர்மகார்யங்களில் ஈடுபடுத்திக் கொள்ளும் சீதையிடம் கூறினாள், ''நீ மிகுந்த பாக்கியசாலி, நீ உன் கடமையை சரியாக கடைபிடிக்கிறாய்'' என்று. (20)

''ஹே சீதே! உன் சுற்றத்தினரை, செல்வத்தை விட்டு காட்டில் ராமனை அனுசரித்து வாழ்கிறாய்.'' (21)

''தன் கணவன் நாட்டில் இருந்தாலும் காட்டில் இருந்தாலும், புண்ணியவானோ அல்லது பாவியாகவே இருந்தாலும், அவனுக்கு கடமையை செய்வதன் மூலம் முன்னுக்கு வரக்கூடிய உலகங்களை அடைகிறாள்.'' (22)

''ஒரு பெண்ணுக்கு அவளுடைய கணவன் உயர்ந்த குணங்களை உடையவனோ அல்லது கெட்ட நடவடிக்கைகளை உடையவனோ, பணக்காரனோ அல்லது ஏழையோ அவனே தெய்வமாகிறான்'' (23)

''ஹே சீதே! கணவரைக் காட்டிலும் உற்ற நண்பர் கிடையாது, அவன் அழியாத தவம் போன்றவன், ஒரு முறை அடைந்து விட்டால் நஷ்டம் அடைவதே இல்லை. இதை உலகை நோக்கியபின் நன்றாக அறிகிறேன்.'' (24)

''ஒழுக்கக்கேடான, லோகாயதமான ஆசைகளினால், ஆக்ரமிக்கப்பட், தன் கணவருக்கு தானே எஜமானி என்ற சிந்தையுடைய பெண்கள் ஒழுக்கத்தையும், கடமையையும் அறிவதில்லை.'' (25)

''தன் கடமையிலிருந்து தவறி ஒழுக்கக்கேடான நடவடிக்கை களினால் ஆக்ரமிக்கப்பட்ட பெண்கள் தீராப்பழிக்கு ஆளாகிறார்கள். (26)

''உன்னைப்போன்ற பெண்கள், நல்ல குணங்களினால், நல்லது கெட்டது பகுத்தறியக்கூடிய தன் கடமையை செவ்வனே ஆற்றுவதன் மூலம் ஸ்வர்க்கத்தை அடைகிறார்கள்.'' (27)

''ஆகையினால், எப்பொழுதும் உன் கணவனை தொடர்வதன் மூலம், பதிவ்ரதைக்குண்டான கடமைகளை நிலை நிறுத்துவதின் மூலம், காலத்திற்கேற்ற உயர்வான கடமையாற்றுவதன் மூலம் உன் கணவனுக்கு உற்ற துணையாக இருக்கின்றாய். ஆகையால் புகழையும் மேன்மையையும் அடைவாய்.'' (28)

ஸ்ரீமத் வால்மீகியால் இயற்றப்பட்ட ஆதிகாவ்யமான
ராமாயணத்தில் அயோத்யா காண்டத்தில்
நூற்றுபதினேழாவது சர்க்கம் முற்றிற்று

## சீதை தன் விவாஹத்தை அனசூயாவிடம் கதையாகக் கூறுதல். அனசூயா சீதைக்கு தெய்வத்தன்மை வாய்ந்த பரிசுகள் அளித்து ஆசீர்வதித்தல்

இவ்வாறாக அனசூயா சீதையிடம் கூறியபிறகு, அனசூயையை நமஸ்கரித்து சீதை தன் இனிமையான குரலால் பேச ஆரம்பித்தாள். (1)

''தங்களைப் போன்ற உயர்ந்த ஸ்த்ரீ இவ்வாறு உபதேசிப்பதில் அதிசயம் ஒன்றும் இல்லை. ஒரு மனைவிக்கு அவள் கணவனே குரு என்பதை நான் அறிவேன்.'' (2)

''என்னுடைய கணவர் கூட நன்னடத்தை இல்லாமல் இருந்தாலும், எந்த ஒரு தயக்கமும் இல்லாமல் அவரை அடிபணிய வேண்டும்.'' (3)

''எந்த கணவர் தன்னுடைய குணங்களால் வாழ்த்தப்பட வேண்டியவரோ, கருணை கொண்டவரோ, புலன்களை அடக்கிய வரோ, தர்மமார்க்கத்தின் வழி நடப்பவரோ, எப்பொழுதும் தாய், தந்தை போன்று பாசத்தைப் பொழிபவரோ அவரைப் பற்றி என்ன பேசமுடியும்?'' (4)

''வலிமைமிக்க ராமன், தன் தாயிடம் எந்த விதமாக நடந்து கொள்கிறாரோ மற்றும் மதிக்கின்றாரோ, அவ்வாறே அரசரின் (தசரதனின்) மற்ற மனைவிமார்களிடமும் அம் மரியாதையைக் காட்டுகின்றார்.'' (5)

''வீரனான ராமன் தன் தந்தை தசரதனிடம் பாசத்துடன் இருக்கிறார். மேலும் தர்மத்தைப் பற்றி வெகுவாக அறிந்துள்ளார். தன் சுயமரியாதையைத் தியாகம் செய்து, தன் தந்தை எந்த ஒரு பெண்மணியை தன் கடைக்கண்ணால் பார்த்தாலும், அவரை தன் சொந்த தாய் போலவே மதிப்பளிக்கிறார்.'' (6)

''பயங்கரமான தனித்துவிடப்பட்ட இந்த காட்டிற்கு புறப்படத் தயாரானபோது, என் மாமியாரால் வழங்கப்பட்ட உயர்ந்த அறிவுரையானது எனது மனதில் ஆழப் பதிந்துவிட்டது.'' (7)

''முன்பு, என் கணவரான ராமனிடம் திருமண சமயத்தில் என் கையை ஒப்படைத்தபோது நான் என் தாயாரால் அறிவுறுத்தப் பட்டேன். அவை ஆழமாக பொறிக்கப்பட்டன.'' (8)

''தங்கள் வார்த்தைகளைக் கேட்டவுடன் என் மாமியார் மற்றும் அன்னையால் வழங்கப்பட்ட அறிவுரைகள் புதிப்பிக்கப்பட்டன. ஒரு பெண்ணுக்கு தன் கணவனுக்கு பணிவிடை செய்வதைக் காட்டிலும் வேறு எந்த தவமும் எந்த சாஸ்த்ரங்களிலும் குறிப்பிடப்படவில்லை.'' (9)

''தன் கணவனுக்கு பணிவிடை செய்ததாலேயே சாவித்ரி ஸ்வர்க்கத்தில் கௌரவிக்கப்ப்ட்டார். தாங்களும் அதே பாதையை பின்பற்றுவதனாலேயே ஸ்வர்க்கத்தை அடைவீர்கள்.'' (10)

''பெண்மணிகளில் தலைசிறந்தவளும், ஸ்வர்க்கத்தின் தேவதையுமான ரோகிணி, தன் கணவரான சந்த்ரனை விட்டு ஆகாயத்தில் ஒரு கணம் கூட காணப்படுவதில்லை.'' (11)

''இவ்வாறு இப்படிப்பட்ட சிறந்த பெண்மணிகள், தன் கணவரிடம் திடமான சபதத்தின் மூலம் தங்களுடைய மெச்சத்தக்க நடவடிக்கைகளால் தேவலோகத்தில் மிகவும் மதிக்கப்படுவர்.'' (12)

அதையடுத்து சீதையின் வார்த்தைகளைக் கேட்ட, அனசூயை பாசத்துடன் உச்சி நுகர்ந்து மேலும் அவளை சந்தோஷிக்க பின்வரும் வார்த்தைகளை கூறினாள். (13)

''ஹே! சீதே, பலவகையான தவத்தை பின்பற்றியதால் சிறந்த தவப்பயனாக பல சக்திகளை அடைந்துள்ளேன். அதன் மூலம் உன்னுடைய ஸந்தோஷத்தை குறித்து உனக்கு எது தேவையோ அதை அளிக்கிறேன்.'' (14)

''உன்னுடைய சரியான மகிழ்வளிக்கும் வார்த்தைகளைக் கேட்டு நான் மிகவும் மகிழ்வடைகிறேன். உனக்கு பொருத்தமான விரும்பக்கூடிய பொருள் என்னவென்று கூறு அதை நான் தருகிறேன்.'' (15)

இவ்வார்த்தைகளைக் கேட்டவுடன் சீதை ஆச்சர்யமடைந்தாள். மிகுந்த புன்முறுவலுடன் தவசக்தியை அடைந்த அனசூயையிடம் கூறினாள், ''தாங்கள் ஏற்கனவே எனக்கு வரத்தை அளித்து விட்டீர்கள் என எண்ணுகிறேன்'' என்று. (16)

இவ்வாறு சீதை கூறியவுடன் தன் கடமையை அறிந்த அனசூயை மிகவும் மகிழ்ச்சி அடைந்தாள். மேலும் பதிலளிக்கையில், ''நான் கூறிய வார்த்தைகளை நீ கூறியதன் மூலம் உண்மையாகி விட்டதால் அளவற்ற ஸந்தோஷம் அடைகிறேன்.'' (17)

''விதேஹ இளவரசி சீதையே! தெய்வீகமான மாலை, ஆடை, அணிகலங்கள், மணம் கொண்ட அபிஷேகத்திற்கான விலை மதிப்பற்ற களிம்பு ஆகியவற்றை உனக்கு அளிக்கின்றேன். இவை எல்லாம் உன் தேகத்திற்கு மேலும் அழகூட்டும். இவைகளை உபயோகிப்பது மிகவும் சுலபம். வண்ணமும் மங்காது.'' (18-19)

''ஜனகரின் மகளே! இந்த மணமுள்ள பசையை பூசிக் கொள்வதன் மூலம் எவ்வாறு லக்ஷ்மியானவள் விஷ்ணுவின் அழகை கூட்டுகின்றாளோ அவ்வாறே நீயும் உன் கணவனின் மஹிமையை அதிகரிக்கச் செய்வாய்.'' (20)

அந்த மிதிலையின் இளவரசி நிகரற்ற அன்புடன் கூடிய வஸ்த்ரம், நறுமண தைலம், ஆபரணம், மற்றும் மாலையை ஏற்றுக் கொண்டாள். (21)

சிறப்புமிக்க சீதா அன்பினால் கூடிய பரிசுகளை வினயத்தோடு இரு கரங்களில் பெற்றுக்கொண்டு முனிபத்னியின் அருகில் அமர்ந்தாள். (22)

தன்னுடைய விரதத்தில் தீவிரமாக இருந்த அனசூயா சீதையின் மனதிற்கு நெருக்கமான கதையை வினவினாள். (23)

''ஹே சீதையே! ஸ்வயம்வரத்தில் ஒப்பற்ற ராமனால் நீ வெல்லப்பட்டாய் என்று பிறர் கூறக் கேட்டிருக்கிறேன். அந்த ஒரு கதை தான் என் காதில் எட்டியது.'' (24)

''மிதிலையின் மகளே, அந்த கதையை விவரமாக உன்னிட மிருந்து கேட்க நான் விரும்புகிறேன். நீ அனுபவித்த கதையை முழுமையாக கூறு.'' (25)

''கேளுங்கள்'' என்று சொல்லி, சீதை கதையை விவரிக்க ஆரம்பித்தாள். (26)

''மிதிலை நகரில் ஜனகன் என்று பெயருடைய அரசர் இருக்கிறார். அவர் ஒரு சிறந்த வீரரும் நீதிமானும் ஆவார். ஒரு க்ஷத்ரியருடைய கடமைகளில் ஈடுபட்டு, பூமியை நீதி வழுவாமல் ஆள்கிறார்.'' (27)

''அவர் வட்டமான பூமியை யாகத்திற்காக உழுது கொண்டிருந்த பொழுது பூமியை பிளந்துகொண்டு நான் வெளியே வந்தேன். ஆதலால் நான் அவருடைய மகள் ஆனேன்.'' (28)

''உள்ளங்கை அளவு விதையை தூவும்பொழுது, அரசர் ஜனகர் புழுதியால் மூடப்பட்ட என்னைக் கண்டு அதிர்ச்சியடைந்தார்.'' (29)

''அவருக்கு குழந்தைச் செல்வம் இல்லாததால், தன்னுடைய சொந்த இசைவின் பேரில் என்னைத் தூக்கி தன் தொடையின் மேல் வைத்து, இது என்னுடைய மகள் என்று கூறி என் மேல் அளவுக்கதிகமான பாசத்தைப் பொழிந்தார்.'' (30)

''ஆகாயத்திலிருந்து அசரீரி, ''ஹே! அரசே! ஒப்பிட இயலாத தெய்வீகத்தன்மை வாய்ந்தவள் (இந்தக் குழந்தை)'' என்றது. அசரீரி சொன்னதை ஜனகர் கேட்டார். (31)

''அதன் பிறகு என் தந்தையும், மிதிலையின் நீதிமிகுந்த அரசருமான (ஜனகர்), என்னை தன்னுடன் வைத்திருப்பதில் மிக்க மகிழ்ச்சி அடைந்தார்.'' (32)

''பட்டத்து அரசியாருக்கு, மெச்சத்தகுந்த வழியில் அளித்திருந்த வாய்ப்பின் மூலமாக அவர் என்னை இயற்கையான அன்புடன், ஒரு தாயின் அரவணைப்புடன் வளர்த்து வந்தார்.'' (33)

''திருமண வயதை அடைந்த என்னை என் தந்தையார், எவ்வாறு ஒரு ஏழை தன் சொத்துக்களை இழந்தபின் சோகத்தில் இருப்பாரோ அவ்வாறே அவரும் (பிரிய நேரிடுமே என்னும்) சோகக்கடலில் மூழ்கினார். (34)

''அவர் பூமிக்கு இந்திரன் போல் இருந்தாலும், ஒரு கன்னிகையை மணம் முடித்து கொடுக்காமல் ஒரு தந்தை இருந்தால் அவர் பழிச்சொல்லுக்கு ஆளாகி விடுவார். செல்வத்தில் அவருக்கு இணையானவரோ அல்லது வசதியே அற்றவரோ கூட அவரை அவமானப்படுத்தும் நிலையை அடைந்து விடுவார்.'' (35)

''இவ்வாறு அவமானப்படுவது என்பது வெகு தூரத்தில் இல்லை என்று உணர்ந்த அவர், எவ்வாறு ஒருவர் படகு இல்லாமல் கடலைக் கடக்க முடியாதோ. அவ்வாறு சோகக் கடலில் மூழ்கினார்.'' (36)

''நான் ஒரு பெண்ணின் கருப்பையில் இருந்து உருவாகா தவள் என்று அறிந்திருந்த அரசர், மிகுந்த ப்ரயாசையுடன் எனக்கு தகுந்த கணவரை கண்டுபிடிக்க முடியாமல் இருந்தார்.'' (37)

''இவ்வாறு தொடர்ந்து யோசித்ததில், தன்னுடைய மகளுக்கு ஸ்வயம்வரம் நடத்த முடிவெடுத்தார்.'' (38)

''பெருந்தன்மை வாய்ந்த வருணபகவான், ஒரு சமயம், யாகம் நடைபெறும் சமயத்தில், சிறந்த வில், வற்றாத அம்புகள், ஒரு ஜோடி அம்புராத் தூணியையும் கொடுத்தார்.'' (39)

''அதனுடைய அதிகமான பளுவினால் எந்த ஒரு மனிதராலும் அசைக்கக்கூட முடியாததாகவும், எந்த ஒரு அரசராலும் தங்களுடைய கனவினால் கூட வளைக்க முடியாததாக இருந்தது.'' (40)

''என்னுடைய தந்தை, வில்லை பெற்றுக் கொண்ட பின், எல்லா இளவரசர்களையும் அழைத்து, அந்த வில்லை அரசவையில் வைத்து, மேலும் உரைத்தார்.'' (41)

''எவனொருவன் இந்த வில்லை தூக்கி நிறுத்தி வளைத்து நாண் ஏற்றுகின்றானோ அவனுக்கு என்னுடைய மகள் சீதை மனைவியாவாள், இதில் யாதொரு சந்தேகமில்லை.'' (42)

''அந்த வில்லை மலைக்கு ஒப்பாக நினைத்த அரசர்கள், அதை தூக்க முடியாமல், தங்களுடைய மரியாதையை செலுத்தி விட்டு அகன்றனர்.'' (43)

''மிகுந்த காலத்திற்கு பிறகு, யாருடைய பராக்ரமம் உண்மையோ அந்த ஜ்வலிக்கின்ற ராமன் தன்னுடைய இளவலான லக்ஷ்மணன் மற்றும் விஸ்வாமித்ரருடன் யாகத்தை தரிசிப்பதற்காக வந்திருந்தார்.'' (44)

''என்னுடைய தந்தையாரின் அழைப்பை மதிக்கும் விதமாக, விஸ்வாமித்ரரும் சகோதர்களான ராம லக்ஷ்மணர்களைப் பற்றி பேசத் தொடங்கினார்.'' (45)

''அரசே! இந்த இரண்டு தசரதகுமாரர்களும் வில்லைப் பார்க்க விரும்புகிறார்கள். தெய்வத்தன்மை வாய்ந்த வில்லை ராமனுக்கு காண்பிப்பாயாக.'' (46)

''முனிவரின் வார்த்தைக்கு இசைந்து என் தந்தை வில்லை எடுத்து வந்தார். மிகுந்த பராக்ரமம் வாய்ந்த ராமன் வில்லை வளைத்து, கண் இமைக்கும் நேரத்தில் நாணை ஏற்றினார்.'' (47-48)

''ராமன் வில்லை நாண் ஏற்ற வளைத்தபோது, நடுவில் இரண்டாக உடைந்து பேரிடியைப் போல் சத்தம் செய்து கீழே விழுந்தது.'' (49)

''பிறகு, உண்மைக்கு உயிர் கொடுக்கும் விதமாக, சுத்தமான நீரை வைத்திருந்த கலயத்துடன் தன்னுடைய முடிவினை, அதாவது என்னை மண முடித்து கொடுப்பதை ராமனுக்கு அரசர் தெரிவித்தார்.'' (50)

''தன்னுடைய தந்தையும் அயோத்தி அரசரும் ஆன தசரதரின் முடிவை அறியாமல் என் தந்தையின் முடிவை உடனடியாக ராமன் ஏற்க இசையவில்லை.'' (51)

''அதன்பிறகு, என் தந்தை வயதில் மூத்தவரும், மாமனாரும் ஆன தசரதரை அழைத்து என்னை ராமனுக்கு மணமுடிக்க விருப்பம் தெரிவித்தார்.'' (52)

''என் தந்தை தன் சொந்த விருப்பத்தின் பேரில், என் இளைய தங்கையான ஊர்மிளையை லக்ஷ்மணனுக்கு மணமுடித்தார்.'' (53)

'இவ்வாறாக, என் தந்தை அந்த ஸ்வயம்வரத்தில் என்னை மணமுடித்து கொடுத்தார்.நானும் என் கணவருக்கு உற்ற துணை யாக இருந்து வருகிறேன்.' என சீதை தன் விவாஹம் நடந்த விதத்தை சொல்லி முடித்தாள். (54)

ஸ்ரீமத் வால்மீகியால் இயற்றப்பட்ட ஆதிகாவ்யமான
ராமாயணத்தில் அயோத்யா காண்டத்தில்
நூற்றுபதினெட்டாவது சர்க்கம் முற்றிற்று



## ஸ்ரீராமன், லக்ஷ்மணன், சீதை, மகரிஷி அத்ரி மற்றும் அனசூயையிடம் விடைபெற்று தண்டகாரண்யம் ஏகுதல்

''பிறகு அனசூயை, சீதையின் கதையை கேட்டு, உச்சி நுகர்ந்து இரண்டு கைகளினால் ஆரத்தழுவிக் கொண்டாள்.'' (1)

''உன்னுடைய ஸ்வயம்வரத்தை மிகவும் அழகாகவும், ஸ்வாரஸ்யமாகவும், ஒவ்வொரு எழுத்தையும், வார்த்தையையும் மிகவும் கோர்வையாக கூறினாய். நான் ஒவ்வொன்றையும் நடந்தாற் போல் கேட்டேன். நான் உன் கதையை மிகவும் ரசித்தேன்.'' (2)

''ப்ரகாசமான சூர்யன் அஸ்தமனம் அடைந்துவிட்டான். மங்களகரமான இரவு நெருங்கிவிட்டது. பறவைகள் தீனிக்காக பகல் முழுவதும் தொலைதூரம் அலைந்து திரிந்து ஓய்விற்காக தங்களுடைய கூடுகளை அடைந்துவிட்டன. நீ அவைகளின் கீச்சிடும் சத்ததை கேட்கலாம்.'' (3-4)

''முனிவர்களும் தங்களுடைய கிண்டிகளில் நீர் நிரப்பிக் கொண்டு, அவர்களுடைய மரவுரிகள், சடங்கு குளியலினால் முழுவதுமாக நனைந்து குழுவாக திரும்ப வருவதைக் காணலாம்.'' (5)

''முனிவர்க்ளும், அக்னிஹோத்ரத்தில் முறையாக த்யாகம் செய்ததன் மூலம், எழும்பும் புகை காற்றின் காரணமாக பழுப்பு நிறத்துடன் புறாக்களும் மிதந்து வருகின்றன. (6)

''மரங்களும் சிதறிய இலைகளுடன் அடர்த்தியாக காணப்படுகின்றன. நாற்திசையும் புலன்களால் கவனிக்கத்தக்க முடியாதவையாக இருக்கின்றன.'' (7)

''இரவுகாப்பாளர்கள் எங்கும் நகரத் தொடங்கிவிட்டனர். தவக்குடில்களில் மான்கள் ஹோமகுண்டங்களைச் சுற்றி தூங்க துவங்கிவிட்டன.'' (8)

''ஹே! சீதையே! நட்சத்திரங்களை அணிந்து இரவு துவங்கி விட்டது. நிலவு தன் கதிர்களை பரப்பிக் கொண்டு ஆகாயத்தில் உயருவதைக் காணலாம்.'' (9)

''என்னுடைய அனுமதியுடன் நீ உன் ராமனுக்கு துணையாக போகலாம். இனிமையாக விவரித்த உன் கதையால் நான் முழுமையாக த்ருப்தியடைந்தேன்.'' (10)

''ஓ சீதா! என் முன்னிலையில் நீ ஆபரணங்களை அணிந்து கொள். குழந்தாய்! உனக்கு ஆபரணங்களை அணிவிக்க எனக்கு அனுமதி கொடு.'' (11)

சீதை ஆபரணங்களை அணிந்து கொண்டு கடவுளின் மகள் போல் காட்சி அளித்தாள். அனசூயையின் கால்களில் பணிந்து வணங்கி ராமனை தரிசிக்க கிளம்பினாள். (12)

ஆண்களின் மத்தியில் சிறந்த சொல் வளமிக்க ராமன் அலங்கரிக்கப்பட்ட சீதையைப் பார்த்து, முனிபத்னியான அனசூயையினால் அளிக்கப்பட்ட பரிசுகளைப் பார்த்து மிகவும் மகிழ்வுற்றான். (13)

மிதிலையின் இளவரசியான சீதை முனிபத்னியால் அளிக்கப் பட்ட உடைகள், ஆபரணங்கள், மாலைகள் ஆகியவற்றை ராமனிடம் காண்பித்து முழுவதையும் விவரித்தாள். (14)

சிறந்த தேரோட்டியான ராமன் மற்றும் லக்ஷ்மணன், மனித குலத்திலேயே அபூர்வமான சீதையை மதித்ததில் மட்டற்ற மகிழ்ச்சி அடைந்தனர். (15)

பிறகு, ரகு வழித்தோன்றலாகிய ராமன், யாருடைய முகம் சந்த்ரனை ப்ரதிபலித்ததோ, முனிஸ்ரேஷ்டர்களின் விருந்தோம்பலை ஏற்றுக்கொண்டு அந்த மங்களகரமான இரவை ஸந்தோஷத்துடன் கழித்தனர். (16)

இரவு கழிந்தவுடன், மனிதர்களில் சிறந்த இருவரான ராம லக்ஷ்மணர்கள், தங்களுடைய சடங்கோடு கூடிய நீராடுதலை முடித்தபிறகு, காட்டில் வசிக்கும் அந்த முனிவர்கள் காலை அக்னிக்கு செய்ய வேண்டிய ஆராதனைகளை முடித்த பிறகு, விடைபெற்றனர். (17)

காட்டில் வசிக்கும் அந்த முனிவர்கள், காட்டின் ஒரு பகுதி அசுரர்களால் பாதிக்கப்பட்டிருப்பதை ராம லக்ஷ்மணர்களிடம் தெரிவித்தனர். (18)

''ஓ! ராமா! இந்த பெரிய காடு, எப்பொழுது வேண்டுமானாலும், எந்த உருவத்தையும் எடுக்கக்கூடிய, மாமிச வேட்டையாடும் அசுரர்களால் பீடிக்கப்பட்டிருக்கின்றது.'' (19)

''ராமா! இந்தப் பெரிய காட்டில், தூய்மையல்லாத, மயக்க நிலைக்கு ஆளான அல்லது சுறுசுறுப்பற்ற அசுரர்கள் முனிவர்களை ஆகாரமாக பக்ஷிப்பார்கள்.'' (20)

''ராமா! இந்தப் பாதை முனிவர்களால் தங்களுக்கு ஆகாரமான பழங்களை சேகரிப்பதற்காக உபயோகப் படுத்தப்படுகிறது. கடந்து செல்ல முடியாத இந்த காட்டை நீ இந்த வழியாக பாதுகாப்பான முறையில் கடந்து செல்லலாம். (21)

எதிரிகளை வேரறுப்பவரான ராமனை முனிவர்கள் ஆசீர் வதித்தனர். அதன்பிறகு, தன் மனைவி மற்றும் லக்ஷ்மணனுடன், அடர்த்தியான மேகங்களில் சூர்யன் நுழைவது போல அந்த அடர்ந்த கானகத்துள் ஸ்ரீ ராமன் நுழைந்தார். (22)

ஸ்ரீமத் வால்மீகியால் இயற்றப்பட்ட ஆதிகாவ்யமான ராமாயணத்தில் அயோத்யா காண்டத்தில் நூற்றுபத்தொன்பதாவது சர்க்கம் முற்றிற்று.



Ref. 1. Srimadvalmikiramayanam, 1967, Printed at Hindi Prachar Press, Madras - 17.

2. Valmikiramayana, Sloka and Translation, Developed and Maintained by IIT,Kanpur.

உ

ஸ்ரீ ராம சரித மானஸம்



இயற்றியவர் கவி வால்மீகியின் அவதாரமாகக் கருதப்படும்

## ஸ்ரீ ஸ்வாமி துளஸிதாஸ கோஸ்வாமி

**கருத்துரை : பி.ஆர். நடராஜன்**

அலாஹபாத் அருகிலுள்ள ராஜாபூர் என்னும் கிராமத்தில் ஆத்மாராம் துபே என்பவருக்கும் ஹீலஸி என்னும் தர்மபத்னிக்கும் பிறந்தவர் துளசிதாஸர். அவர் எப்பொழுதும் ராம நாமத்தைச் சொல்லிக் கொண்டிருந்தால் அவரை ராம்போலா என்று ஊர் மக்கள் அழைக்கத் தொடங்கினர். ஒரு சமயம் நரஹரி ஆனந்தர் என்பவர் ஒன்பது நாட்கள் வால்மீகி ராமாயணத்தை பாராயணம் செய்தார். அந்த ஒன்பது நாட்களும் ராம சரித்ரத்தைக் அசையாமல் பேசாமல் ராம்போலா கேட்டுக் கொண்டிருந்தார். பாராயணம் முடிந்தவுடன் சமாதி நிலை கலைந்து சுய நினைவுக்கு வருபவர் போல் ராம்போலா கண் விழித்தார். அன்றிலிருந்து வால்மீகி ராமாயணத்தை தங்கு தடையின்றி ராம்போலா சொல்ல ஆரம்பித்தார்.

நரஹரி ஆனந்தர் வீட்டில் ஒரு துளசி செடி இருந்தது. ஒரு முறை ராம்போலா அந்த செடியை வலம் வந்துக் கொண்டே வால்மீகி ராமாயணம் முழுவதும் ஒப்புவித்தார். துளசி செடி வளர்ந்து முற்றம் முழுவதும் பரவியது. அன்றிலிருந்து ராம்போலா துளசிதாஸர் என அழைக்கப் பட்டார்.

பாமர மக்களும் ராமாயணத்தை அறிந்துக் கொண்டு ராமனைத் தியானம் செய்து அந்த ராம ரஸத்தைப் பருக வேண்டும் என்னும் நோக்கத்தோடு ராமாயணத்தை அவத் என்னும் அங்கு புழங்கும் மொழியிலே இயற்றி, பாடி, அனைவரையும் ஈர்த்தார். அதுவே ராமசரித மானஸம் என்றாயிற்று. மானஸ என்பது ஒரு

பெரிய ஏரி என்பதாகும். ராமனின் செயற்கரிய செயல்களின் ப்ரபாவ ஏரி (மானஸரோவர்) எனக் கொள்ள வேண்டும்.

இதற்கு முன் நாம் வால்மீகி ராமாயணத்தில் பார்த்த சம்பவத்தையும் துளசிதாஸர் சொல்லியிருக்கிறார். வால்மீகி ராமாயணத்தில் அது அயோத்யா காண்டத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. துளசி தாஸர் அதை ஆரண்ய காண்டத்தின் தொடக்கத்தில் சொல்கிறார்.

மஹரிஷி அத்ரியின் ஆஸ்ரமத்திற்கு சீதை, லக்ஷ்மணனோடு ஸ்ரீ ராமன் செல்லுதல். ஆரண்ய காண்டம்.

சங்கல்பித்து எடுத்துக் கொண்ட காரியம் தடை ஏதும் இன்றி நல்ல படியாக அமைய வேண்டும் என்னும் நோக்கத்தோடு ஒவ்வொரு காரியத்தை அல்லது புத்தகத்தை தொடங்கும் போதும் தெய்வங்களைப் ப்ரார்த்திக் கொள்வது என்பது ஹிந்துக்களிடையே இருந்து வரும் ஸம்ப்ரதாயம். அவ்வழியிலே துளசி தாஸர் ஒவ்வொரு காண்டத்தின் தொடக்கத்திலும் த்யான ஸ்லோகத்தோடு தான் ஆரம்பிக்கிறார்.

★ ப்ரஹ்ம குலத்தவரான சங்கரனை வணங்குகிறேன். அவர் ஸ்ரீ ராமனுக்கு மிகவும் பிரியமானவர். அவர் தர்மம் என்னும் மரத்தின் வேர். விவேகம் என்னும் கடலுக்கு சந்தோஷத்தை தரும் பூரண சந்த்ரன். வைராக்யம் என்னும் தாமரையை மலரவைக்கும் ஆதவன். மதியின்மை என்னும் மேகக் கூட்டத்தை கலைக்கும் காற்று. தாபத்ரயங்களை ஒழிப்பவர். பாபங்களை போக்குகின்றவரும் ஆன சங்கரனை வணங்குகிறேன்.

★ அனைவரையும் ஆனந்தமடையச் செய்யும் அந்த ராமனை நமஸ்கரிக்கிறேன். அவர் அழகான வடிவத்தைக் கொண்டவர். மஞ்சள் நிறத்தில் மரவுரி தரித்தவர். அவர் கைகளில் அம்பும் வில்லும் வைத்திருப்பவர். அழகிய அம்புராத் தூணியை அணிந்திருப்பவர். அவரது கண்கள் இரண்டும் இரு தாமரை மலர்களுக்கு ஒப்பாகும். அவரது ஜடாமுடியானது மகுடம் தரித்தது போல இருக்கும். ஸீதையுடனும் லக்ஷ்மணனுடனும் காட்டில் சஞ்சரிக்கும் ஸ்ரீ ராமனை வணங்குகிறேன்.

★ பார்வதி! ஸ்ரீ ராமனுடைய மேன்மையான இயல்புகள் மறைந்திருக்கும். எளிதில் அறிய முடியாதவை. அவற்றை

அறிந்துக் கொண்ட முனிவர்களும் அறிஞர்களும் அமைதியைப் பெறுகிறார்கள். பகவானிடம் அன்பு பாராட்டா தவர்களும் தர்ம சிந்தனை இல்லாதவர்களும் அவற்றை கேட்டு அச்சம் அடைகிறார்கள் என்று கதையை ஈஸன் தொடர்ந்தார்.

★ இது வரை என் புத்தி சக்திக்கு உட்பட்டு அயோத்தி நகரத்து மக்கள் ராமன் மீது கொண்ட அபரிமித அன்பையும் பரதனுடைய ஒப்பற்ற மாண்பையும் கூறினேன். இனி யாரொருவர் தேவர்கள், முனிவர்கள், மனிதர்கள் போன்றவர்களுடைய உள்ளங்களை மகிழ்விக்கின்றாரோ, அப்படிப்பட்ட, பிரபு ராமனுக்கு வனத்தில் நடந்த நிகழ்வுகளைச் சொல்கிறேன்.

★ ஒரு சமயம் மிகவும் அழகான புஷ்பங்களைத் தொடுத்து அன்புடன் அதை ஸீதைக்கு சூடினார்.

★ ஒரு எறும்பினால் கடலின் ஆழத்தை அளவிட முடியுமா? அப்படிப்பட்ட ஒரு காரியத்தில் இந்திரனின் மகன் ஜயந்தன் ஈடுபட்டான்.

★ சிறுமதி கொண்ட அவன் காக்கை வடிவம் கொண்டு. ஸீதையின் கால்களைக் கொத்தி விட்டான். ரத்தம் வழிந்தது. ராமனும் வெகுண்டு அம்பைத் தொடுத்தார்.

★ ஏழைகள், மற்றும் பக்தர்கள் மீதும் மிகவும் கருணைக் கொண்டவரான ஸ்ரீ ராமனை வேதனை அடையச் செய்தான்.

★ ராமனின் அஸ்த்ரம் அவனை விரட்டியது. அவன் தந்தை முதற்கொண்டு யாரும் அவனுக்கு புகலிடம் அளிக்கவில்லை. ராமனுக்கு எதிரான செயல் என்பதால் யாரும் அதை ஆதரிக்கவில்லை.

★ அவனுக்கு உண்மையான பயம் ஏற்பட்டுவிட்டது. ப்ரஹ்மா, சிவன், தேவர்கள் என அவனுக்கு யாருடைய தயவும் கிட்டவில்லை.

★ அவன் ஆதரவு அற்றவனாகிவிட்டான். ராமனுக்கு இழைத்த தவறு எவ்வளவு மகத்தானது என்பதை உணர்ந்துக் கொண்டான்.

★ ராமனுக்கு விரோதி என்பதால் இந்த உலகம் நெருப்பை விட அதிகமாக தஹிக்கும் உஷ்ணத்தைக் கொண்டதாக இருந்தது.

★ ஸ்ரீ நாரதரால் அவன் படும் கஷ்டத்தை பார்த்துக் கொண்டு இருக்க முடியவில்லை. அவனுக்கு ஸ்ரீ ராமனிடம் உடனடியாக சரணடைவதே சிறந்த மார்க்கம் என அறிவுறுத்தினார்.

★ மன்னிப்பைக் கோரிக்கொண்டே ஸ்ரீ ராமனுடைய பாத கமலங்களைப் பற்றினான் ஜயந்தன்.

★ ப்ரபு! என்னைக் காப்பாற்றுங்கள். என் மன்னிப்பை ஏற்றுக் கொள்ளுங்கள். என மனமுருகி ஜயந்தன் ப்ரார்த்தித்தான். கிருபை நிறைந்தவரான ராமன் அவனை மன்னித்து அவனது ஒரு கண்ணைப் பார்வையற்றதாக செய்து விட்டார்.

★ பரமேஸ்வரன், ''பார்வதி! ஜயந்தன் பெரும் தவறை செய்தான். அவன் தண்டிக்கப் பட வேண்டியவன் என்பதில் ஐயமேதும் இல்லை. ஆனால் ராமன் மிக்க கருணைக் கொண்டவர். அவனை மன்னித்து விட்டு விட்டார். அவரைப் போல் க்ருபாளு யாரேனும் உண்டா!'' என்றார்.

★ சித்ர கூடத்தில் இனி தங்கினால் ஜனங்கள் திரண்டு விடுவார்கள் என ராமன் எண்ணினார்.

★ அங்குள்ள முனிவர்களிடம் விடைப்பெற்றுக் கொண்டு, ஸீதையோடு இரு ஸஹோதரர்களும் கிளம்பி விட்டனர். பிறகு அத்ரி மாமுனியின் ஆஸ்ரமத்தை நோக்கி சென்றனர். அம்முனிவர் அந்த செய்தி அறிந்து மட்டற்ற மகிழ்ச்சியை அடைந்தார்.

★ அத்ரி முனிவரின் ஆனந்தம் எல்லையைக் கடந்தது. அவரின் மெய் சிலிர்த்தது. ஆர்வத்துடன் ராமனை எதிர்கொண்டு அழைக்க விரைந்தார். முனி ஸ்ரேஷ்டர் ஓடி வருவதைக் கண்ட ராமனும் துரிதமாக அவரை நோக்கி சென்றார். ராமன் முனிவரை நமஸ்கரித்தார். முனிவர் அவரைத் தூக்கி ஆரத் தழுவிக் கொண்டார். கண்களில் ஆனந்த கண்ணீர் ஆறாகப் பெருகியது.

★ மஹரிஷி ஸஹோதரர்களுக்கு ஆசனம் அளித்து பூஜித்தார், நலன் விசாரித்தார். பழங்கள், கிழங்குகள் அளித்து உபசரித்தார். ராமனுக்கு இவையனைத்தும் சந்தோஷத்தை தந்தன.

★ ஆசனத்தில் அமர்ந்திருக்கும் ராமனின் பாங்கு மஹரிஷியைப் பரவசமாக்கியது. தனது இரு கைகளையும் கூப்பிக் கொண்டு ப்ரபு ராமனை புகழ்ந்து பாடத் தொடங்கினார்.

